# பகவத் பாதை




Bagavath Path

தனிச்சுற்றுக்கு மட்டும் இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு 15-12-2012


# குழந்தையும் கணக்கரும்

**- ஸ்ரீ பகவத்**



விடுதலை என்பதும் நமது கள்ளங்கபடமற்ற தன்மை என்பதும் வேறுவேறல்ல.

– ஸ்ரீ பகவத்



அன்பர் ஒருவர் தனது அனுபவத்தைக் கூறினார்.

"நான் ஒரு இயக்கத்தில் இருந்து வந்தேன். அந்த ஆன்மிக இயக்கத்தில் அதை நடத்துபவர்கள் பெரும்பாலும் பெண்களே. தியான முயற்சிகள் பலவற்றைச் சொல்லிக் கொடுத்தார்கள். எத்தனையோ பேர்கள் பயன் அடைந்திருக்கிறார்கள். நானும் பலனடைந்தவர்களில் ஒருவன்தான்...

"ஆனால் ஓரளவுக்குமேல் எவராலுமே போக முடியவில்லை. வகுப்பு நடத்தும் தலைவர்கள் கூட ஓரளவுக்குமேல் போகமுடியாமல் தேங்கி நின்றுவிடுகிறார்கள். எனக்குத் தெரிந்த ஒருவர் குடிகாரராக இருந்தார். குடித்துவிட்டு மனைவி மக்களுக்குத் தொந்தரவு கொடுத்துவந்தார். அவர் இந்த இயக்கத்தில் சேர்ந்து குடிப்பதை விட்டுவிட்டார். மனைவி மக்கள் மிகவும் சந்தோசமடைந்து போனார்கள். ஆனால் அவர்களுடைய சந்தோசம் வெகு நாட்கள் நீடிக்கவில்லை...

“அவர் இப்போது வீட்டினரையும், வேலையையும் புறக்கணித்துவிட்டு அந்த இயக்கத்திலேயே ஐக்கியமாகிவிட்டார். அந்த இயக்கத்திலிருப்பவர்களும் அதற்கு முக்கியத்துவமே கொடுத்து வருகின்றனர். அவரது வீட்டினர் இப்போது வேறுவிதமாகப் புலம்புகின்றனர், ‘அவர் குடிகாரராக இருந்ததுகூடப் பரவாயில்லை’ என்று...

“அந்த இயக்கத்தைச் சேர்ந்தவர்கள், தாங்கள் தாம் உயர்ந்தவர்கள் என்ற ஆணவத்தைத் தங்களையறியாமலேயே வளர்த்துக் கொண்டுள்ளனர். அந்த இயக்கத்தில் உள்ள ஒருவர் தங்கள் வீட்டில் தயாரிக்கும் உணவை மட்டுமே சாப்பிடவேண்டும். வெளியே சாப்பிடக் கூடாது. அதிலும் பூண்டு போன்ற சில பொருட்களை சமையலில் சேர்த்துக் கொள்ளக்கூடாது. சிலர் இதனால் உணவின் மீதே ஈடுபாடு காட்டாமல் நோயாளிகளைப்போல் மாறிவிட்டனர். ஒருவர் தனது தாய் வீட்டுக்குச் செல்லும்போது கூட, தன்வீட்டில் சமைத்த உணவையே எடுத்துச் சென்றிருக்கிறார். இதனால் தாய்க்கும் மகனுக்குமிடையே கூட கருத்து வேறுபாடு ஏற்பட்டுவிட்டது”.

அந்த இயக்கத்தில் ஈடுபாடு கொண்ட இன்னும் சிலரைக்கூட காண நேர்ந்தது.

2000-ம் வருடத்தில் உலகம் அழிந்து விடும் என்ற கருத்தை அந்த இயக்கத்தினர் கூறியிருந்திருக்கின்றனர். அதை உண்மை என்று நம்பிய ஒருவர் அந்தப் பயத்தினால் உடல்நலமும், மனநலமும் பாதிக்கப்பட்டுவிட்டார்.

இன்னும் ஒருவர் அடுத்தவர் கொடுத்த உணவை உட்கொள்ளாமல் இருந்துவந்தார். காலப்போக்கில் அவரது மனநலமும் பாதிப்புக்குள்ளாகிவிட்டது. "அடுத்தவர்கள் நமக்குக் கொடுக்கும் உணவுகளில் நம்மை மயக்கிப்போடும் மருந்துகளைக் கலந்துள்ளார்கள்" என்று கூற ஆரம்பித்துவிட்டார்.

இன்னுமொரு அன்பர் தனது அனுபவங்களைக் கூறினார். அவர் ஹைதராபாத்திலிருந்து வந்திருந்தார். அவர் பகுதியிலும் அவர் பலவிதமான ஞானிகளையும், ஆன்மிக இயக்கங்களையும் அணுகி பயிற்சி எடுத்திருக்கிறார். எல்லாவற்றிலும் பலன் கிடைத்ததாகக் கூறினார். ஆனால் முடிந்த முடிவான நிலைக்குத்தான் வரமுடியவில்லை என்று கூறினார்.

உண்மையில் ஆன்மிக இயக்கங்கள் என்ன செய்து கொண்டிருக்கின்றன?

அவை சமுதாயத்திற்குத் தேவையான ஒன்றா, அல்லது அவையே பிரச்சினைகளைத் தூண்டுகின்றனவா?

அவைகளைச் சார்ந்திருக்கும் நம்முடைய தகுதி என்ன? அவற்றோடு நாம் கொண்டிருக்கும் தொடர்பு என்ன?

இங்கு என்ன நடக்கின்றது?

எல்லா வழிகாட்டிகளும் நல்லவர்களே. வழிகாட்டமுயலும் அனைத்து இயக்கங்களும் உயர்ந்தவைகளே. அவர்கள் எவரும் நம்மை ஏமாற்றும் நோக்கில் செயல்படவில்லை.

அவர்கள் அனைவரும் அவர்களுக்குத் தெரிந்தவற்றை அவர்களுக்குத் தெரிந்த வழிமுறையில் கொடுத்துவருகிறார்கள்.

அவர்கள் அனைவரது சேவையும் நமக்குத் தேவையே.

அப்படியானால் எங்குதான் உள்ளது பிரச்சினை?

போதிப்பவர்களிடமோ, இயக்கங்களிடமோ பிரச்சினை கிடையாது. அவர்களை - அவற்றை - பயன்படுத்திக்கொள்ளும் நம்மிடந்தான் பிரச்சினை உள்ளது. நாம்தான் நமது அணுகுமுறையைச் சீரமைத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு மரம் ஆரோக்கியமாக வளரவேண்டுமானால் அது எப்படி வளரவேண்டும்?

நாம் நமக்கு வேண்டியதைப் பெற கடைகளையோ, ஹோட்டல்களையோ தேடிச் செல்லலாம். ஆனால் மரங்களால் அப்படிப் போக முடியுமா?

மரம் தனக்கு வேண்டிய உணவைப் பெற தனது வேர்களை நாலாபுறமும் படரவிடுகின்றது. தனது வேர்களைப் படரவிட்டு தனக்கு வேண்டியவற்றை வேர்களின்மூலம் கிரகித்து அவற்றைத் தன்மயமாக்கிக் கொள்கின்றது.

அது சுதந்திரமாகவும், ஆரோக்கியமாகவும் வளர்கின்றது.

அப்படி இல்லாமல், அந்த மரமானது தனக்கு ஆதரவும், பாதுகாப்பும் தேடி

தனது கிளைகளை, பக்கத்து மரங்களின் மீது படரவிட்டு

அவைகளின் ஆதரவில் அந்தமரம் நின்று கொண்டிருந்தால்

அந்த மரத்தின் நிலைமை என்னவாகும்?

வேர்களை நாலாபக்கமும் படரவிட்டு நமக்கு வேண்டியதைப் பெறுவதில் தவறில்லை. ஆனால் நமக்கு வேண்டியதைப் பெறும் நோக்கில் கிளைகளைப் படரவிடுவதுதான் தவறு.

இதனால் நாம் நமது சுதந்திரத்தை இழந்துவிடுகிறோம். நாம் சார்ந்திருக்கும் இடத்திற்கு அடிமையாகிவிடுகிறோம்.

உண்மையில் ஆன்மிகப் போதனைகள், ஆன்மிக இயக்கங்கள், ஆன்மிக அமைப்புக்கள் அனைத்தும்

நமக்கு விடுதலையை அளிக்கும் நோக்கத்திற்காகவே உள்ளன.

ஆனால் நமது விடுதலையே கேள்விக்குறியாகும் பட்சத்தில் நாம்தான் நமது அணுகுமுறையை மாற்றிக்கொள்ள வேண்டும்.

ஓஷோ ரஜினீஷ் அருமையாக ஒரு கதையைக் கூறியிருப்பார்.

ஒருவர் கலையழகுடன் தனது மேலாடையைத் தைக்க விரும்பி, அதற்காக, பெயர் பெற்ற தையற் கலைஞரான சும்பாச்சு என்ற டெய்லரிடம் தனது துணியைக் கொடுத்தார்.

சும்பாச்சு டெய்லரும் அந்தத் துணியில் கலைநயமான மேலாடை ஒன்றைத் தைத்துக் கொடுத்தார். அந்த ஆடை மிகவும் கலை நயத்தோடு வடிவமைக்கப்பட்டிருப்பது பார்த்த உடனேயே தெரிந்துவிட்டது. மிகவும் மகிழ்வடைந்த அவர், தனக்காகத் தைக்கப்பட்ட அந்த அழகான ஆடையை அந்த டெய்லரின் முன்பாகவே அணிந்து பார்த்தார்.

ஆடை அழகாகத்தான் இருந்தது. ஆனால் முதுகுபக்கமாக, சட்டையிலுள்ள துணி கொஞ்சம் புடைத்துக்கொண்டு விகாரமாகத் தோன்றியது.

அதைப்பற்றிக் கேட்டதும் அந்த டெய்லர் கூறினார். "துணியின் தையல் கலை அழகுடன் அமைந்துவிட்டது. இனி இதனை மாற்றி அமைக்கக்கூடாது. நீங்கள் இந்த மேலாடையை அணிந்துகொண்டு நடக்கும்போது, முன்பக்கமாக நீங்கள் சற்றுக் குனிந்து கொண்டால், புடைத்துக்கொண்டிருக்கும் அந்தத் துணி சரியாகிவிடும்".

மேலாடையை அணிந்த அவரும் முன்பக்கமாகக் குனிந்து பார்த்தார். டெய்லர் கூறியதுபோல், புடைத்துக் கொண்டிருந்த துணி சமன்பட்டுவிட்டது. ஆனால் இப்போது இடுப்பின் வலது ஓரமாக புதிதாகக் கொஞ்சம் துணி புடைத்துக் கொள்ள ஆரம்பித்தது.

அதையும் டெய்லரிடம் சுட்டிக்காட்டினார். அதற்கும் டெய்லர் இப்படிக் கூறிவிட்டார். "இதையும் நாம் சரி செய்யக் கூடாது. இதை மாற்றினால் மேலாடையின் கலைநயம் போய்விடும். நீங்கள் முன்பக்கமாகக் குனியும்போது நேராகக் குனியக்கூடாது. அப்படி முன்பக்கமாகக் குனியும்போது உங்களது உடலை சற்று இடப்பக்கமாகத் திருப்பியவாறே குனிந்தீர்களானால் துணி இப்படி வலது இடுப்பு பக்கம் புடைத்திடாது".

அவரும் டெய்லர் கூறியதைப்போல் உடலைச் சற்று இடதுபக்கமாகத் திருகியதுபோல் முன்பக்கமாகக் குனிந்து பார்த்தார். இப்போது துணி முழுவதும் கச்சிதமாகப் பொருந்திவிட்டது.

அவர் அந்தமேலாடையைப் போட்டுக்கொண்டு அந்த டெய்லர் கூறிய வகையில் உடலை வளைத்துக் கொண்டே நடந்தார்.

எதிரே வந்த ஒருவர் அவருடைய சட்டையைப் பார்த்து வியப்படைந்தார். "சட்டை எவ்வளவு நேர்த்தியாகவும், கலை நயத்தோடும் தைக்கப்பட்டுள்ளது! சும்பாச்சு டெய்லர்தான் தைத்தாரா?" - இப்படி அவர் கேட்டார்

சட்டையை அணிந்திருந்த அவருக்கு மிகுந்த மகிழ்ச்சி. ஆனாலும் கேட்டார். "சும்பாச்சு டெய்லர்தான் இந்தச்சட்டையைத் தைத்துள்ளார் என்பதை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?"

"உங்களைப்போன்ற ஒரு கூனனுக்கு சும்பாச்சு ஒருவரால்தான் இத்தகைய நேர்த்தியாக சட்டை தைக்கமுடியும்".

நாம் நமது வேர்களின்மூலம் எந்த ஞானியரையும் அணுகலாம்; எந்த இயக்கத்தையும் அணுகலாம். நமக்கு வேண்டியதைக் கிரகித்துக்கொள்ளலாம்.

நாம் நமது கிளைகளின் மூலம் மற்றவர்களைச் சார்ந்திருப்பது மட்டுமே நம்மை முடமாக்கிவிடும்.

"நான் ஒவ்வொரு மருத்துவமனையிலும் பல வருடங்கள் தங்கி சிகிச்சை பெற்றுள்ளேன்"

- என்று கூறினாலும் சரி

அல்லது "நான் ஒரே மருத்துவமனையில் நிரந்தரமாகத் தங்கி சிகிச்சை பெற்று வருகிறேன்" என்று கூறினாலும் சரி

- நம்மை நோயாளியாக்கிவிட்டோம் என்பதுதான் உண்மை. ஒவ்வொரு மகான்களாகப் பார்த்து வருகிறேன், ஒவ்வொரு ஆன்மிக அமைப்புகளாகப் போய்வருகிறேன் என்றால்

- அதுவும் இதைப்போன்றது தான்.

பலரிடமும் நாம் இவ்வாறு சிகிச்சை பெறவேண்டுமா?

நமக்கு அப்படி என்னதான் நோய்?

நமது பிரச்சினைதான் என்ன?

நம்முடைய தீர்வு என்பதுதான் என்ன?

பகுத்தறிவு மரத்தின் கனியைப் புசித்ததுதான் நமது ஆதி பாவம் என்று கிறித்துவ மதத்தில் கூறப்படுகிறது.

அப்படி ஒரு பாவம் நம்மிடம் இருக்கிறதா?

அந்த ஆதிபாவத்திலிருந்துதான் நாம் விடுபடவேண்டுமா?

நம்முடைய வாழ்வைத் தீர்மானிப்பது நமது மனது மட்டுமே. ஒருவருடைய மனது எப்படி அமைந்திருக்கிறதோ, எப்படிச் செயல்படுகிறதோ

அப்படித்தான் அவருடைய மொத்த வாழ்வுமே அமைந்திருக்கிறது.

சரி; நம்முடைய மனது எப்படிச் செயல்படுகிறது? அது எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது? அது எவ்வாறு இயங்குகிறது?

நம் மனது இரண்டு பகுதிகளாக உள்ளது.

ஒன்று உணர்வு - Consciousness;

அடுத்தது அறிவு - Intellect - knowledge

உணர்வு - Consciousness என்பதுதான் நம் மனதின் இயற்கையான நிலை. நம் அறிவு அனைத்தும் (Intellect - knowledge) சிறுகச் சிறுக சேகரிக்கப்பட்ட அனுபவம் மற்றும் தகவல்களின் தொகுப்பே ஆகும்.

நமது உணர்வும், அறிவும் கலந்த கலவையினால் தான் நமக்குப் பலவிதமான மன அனுபவங்கள் ஏற்படுகின்றன; மன உணர்ச்சிகள் எற்படுகின்றன.

நாம் நமது நண்பரைப் பார்க்கும்போது, "நாம் நண்பரைப் பார்க்கிறோம்" என்ற செய்தி

நமது உணர்வோடு தொடர்பு கொள்கிறது.

அந்தச் செய்தியும் உணர்வும் சேர்ந்த நிலையில் நமது உணர்வு

மகிழ்ச்சி என்னும் உணர்ச்சியாக - அனுபவமாக வெளிப்படுகிறது.

நாம் விரும்பாத ஒருவரைச் சந்திக்க நேர்ந்திடுகின்றது. "நமக்குப் பிடிக்காத ஒருவரைப் பார்க்கிறோம்" என்ற செய்தி நமது உணர்வுடன் தொடர்பு கொள்கிறது.

அந்தச் செய்தியும் உணர்வும் சேர்ந்த நிலையில் நமது உணர்வு

வெறுப்பு - துன்பம் எனும் உணர்ச்சியாக - அனுபவமாக வெளிப்படுகிறது.

- Consciousness ம் Intellect ம் கலந்த கலவையாக நமது மன அனுபவங்களெல்லாம் வெளிப்படுகின்றன.

நமது இயற்கையான நிலை உணர்வு மட்டுமே. அது கள்ளங்கபடமில்லாமல் இருக்கிறது. Innocent state ஆக இருக்கிறது. அதனுடன், நாம் இதுவரை சேகரித்த அறிவு செயல்படும்போது, நமது கபடமற்ற தன்மையில் மாற்றம் ஏற்படுகிறது.

நாம் சேகரித்த அறிவு, ஒரு கணக்கராகச் செயல்படுகிறது. அது கணக்கிட்டுத்தான் ஒவ்வொன்றையும் செய்கிறது.

கபடமற்ற நமது தன்மையுடன் இந்தக் கணக்கர் கொண்டுள்ள தொடர்பினால் விளைவதுதான் நமது வாழ்க்கை அனுபவங்கள் அத்தனையும்.

நமது அனுபவங்கள் விதவிதமாக அமைந்துள்ளன. சில அனுபவங்கள் நமக்குப் பிடித்தவையாக அமைந்துள்ளன. பல அனுபவங்கள் நமக்குப் பிடிக்காதவையாக அமைந்துள்ளன.

பிடித்த அனுபவங்களைத் தக்கவைத்துக் கொள்ளவும், பிடிக்காத அனுபவங்களிலிருந்து விடுபடவும் முயல்கிறோம்.

இதற்குத் துணையாக

ஞானிகளைக் கூப்பிடுகிறோம்; ஆன்மிக அமைப்புகளைக் கூப்பிடுகிறோம்.

அப்படிக் கூப்பிடுவது யார்?

அப்படிக் கூப்பிடுவது நமக்குள் எது?

அப்படிக் கூப்பிடுவது நமது கள்ளங்கபடமற்ற நமது உணர்வா? அல்லது கணக்கராகச் செயல்படும் நமது அறிவா?

நிச்சயமாக நமது கள்ளங்கபடமற்ற நமது உணர்வு எவரையும் கூப்பிடவில்லை; எந்த உதவியையும் நாடவில்லை.

நமது கணக்கர்தான் கூப்பிடுகிறார். நமது கணக்கர்தான் தனது அறிவின்மூலம், நமது அனுபவங்களைச் சீரமைக்க முயல்கிறார்.

நமது ஆன்மிக உலகின் நோக்கம்தான் என்ன?

நமது இலக்குதான் என்ன? நாம் எதனை நோக்கி நமது ஆன்மிக முயற்சிகளில் ஈடுபடுகிறோம்?

முக்திதான் நமது இலக்கு. விடுதலைதான் நமது இலக்கு.

அந்த முக்தி என்பது என்ன? அந்த விடுதலை என்பது என்ன?

நமது உணர்வு நிலையின் இயற்கையான நிலைதான் விடுதலை. நமது Consciousness ன் இயல்பான நிலைதான் முக்தி நிலை.

விடுதலை என்பதும் நமது உணர்வு நிலையும் வேறு வேறல்ல.

நமது கள்ளங்கபடமற்ற தன்மையும் விடுதலை என்பதும் வேறுவேறல்ல.

நமது மனது கள்ளங்கபடமில்லாமல் இயங்கும் நிலையைத்தான்

நம் மனது விடுதலையடைந்த - முக்தியடைந்த நிலையாகக் கூறுகிறோம்.

மனது தனது இயல்பான உணர்வுநிலையிலேயே இருப்பதற்கு

தனது இயல்பான கள்ளங்கபடமற்ற தன்மையிலேயே இருப்பதற்கு

நாம் என்ன செய்யவேண்டும்?

உணர்வு என்ன செய்யவேண்டும்?

அறிவு என்ன செய்யவேண்டும்?

கணக்கராகிய அறிவு பொறுப்பை எடுத்துக்கொள்ளும்போது

முதலில் அதுவே தனது அனுபவங்களை எதிர்த்துப் போராடுகிறது.

பிறகு தன்னால் முடியாது என்று கருதி தனது போராட்டத்திற்குத் துணையாக அடியாட்களைத் தேர்ந்தெடுக்கிறது.

போராட்டத்திற்கு ஆதரவாக ஞானிகளைக் கூப்பிடுகிறது; ஆன்மிக அமைப்புகளைக் கூப்பிடுகிறது.

விளைவு?

அகமுரண்பாடுதான் வலுவடைகிறது. போராட்டந்தான் தீவிரமடைகிறது. உண்மையில் கணக்கராகிய நமக்கே அங்கு வேலை கிடையாது. பிறகு நாம் கூட்டி வரும் அடியாட்களுக்கு எங்கே வேலை இருக்கிறது?

நம்முடைய எதிரியைக் கொலை செய்வதற்காக நாம் அடியாட்களுடன் வருகிறோம். நாம் வருவதற்கு முன்னால் நம் எதிரி இயற்கையாகவே மரணமடைந்து விட்டார். நமக்கே அங்கு வேலை கிடையாது. பிறகு அடியாட்களுக்கு மட்டும் என்ன வேலை?

நமது உணர்வு நிலையிலும் - Consciousness யிலும் பிரச்சினை இல்லை; நமது அறிவு நிலையிலும் Intellect லும் - கணக்கரிடமும் பிரச்சினை இல்லை.

இரண்டும் சேர்ந்த கலவையினால் ஏற்பட்ட அனுபவங்களில் தான் பிரச்சினை.

இந்தப் பிரச்சினைகளுக்கு தீர்வுகாணத் தகுதி உடையவர் யார்? எது?

நம்முடைய உணர்வுநிலையா? - நம்முடைய கள்ளங்கபடமற்ற தன்மையா? அல்லது நம்முடைய அறிவா? - நம்முடைய Intellect எனும் கணக்கரா?

நம்முடைய பிரச்சினைகளுக்கெல்லாம் காரணம் நமது அறிவின் சேர்க்கையாக இருந்தாலும் பிரச்சினைகள் நிகழுமிடம் நமது உணர்விலேயே ஆகும்.

நீரின் மேற்பரப்பில் விரலால் தொடுகிறோம். நீரைத் தொட்டதும், தொட்ட இடத்திலிருந்து, அந்த நீர்ப்பரப்பில் ஒரு சிறு சலனம். சிறிய அலையாக உருவாகி அப்படியே விரிந்து பரவுகிறது.

அப்படி விரிந்து பரவும் அலையை அப்புறப்படுத்த நமது விரலைக்கொண்டே சமன் செய்ய வேண்டுமா?

அப்படி நாம் முயல்வோமாயின் மீண்டும் மீண்டும் அலைதான் தோன்றிவிடும். நீரே நீரைச் சமன் செய்துகொள்ளும்.

உணர்வே நமது அனுபவக் குமுறல்களையெல்லாம் சமன் செய்துகொள்ளும். நமது கள்ளங்கபடமற்ற தன்மையே கபடமான அனுபவங்களையும் சீரமைத்துக்கொள்ளும்.

நமது அனுபவங்களைச் சீரமைக்கும் வேலை எதுவும் தனக்குக் கிடையாது என்பதையும், தன்னால் அது முடியாது என்பதையும்

இந்தக் கணக்கர் புரிந்து கொள்ளவேண்டும்.

நாம் எதையோ அடையவேண்டும் என்று

எந்த ஞானிகள் வழிகாட்டினாலும் சரி

எந்த இயக்கங்கள் வழிகாட்டினாலும் சரி

அது இந்தக் கணக்கரையே வலிமையாக்கிவிடும்.

இந்தக் கணக்கர் எல்லாவற்றையும் கற்றுக்கொள்ளவேண்டும். எல்லா ஞானிகளையும் மதித்து அவர்கள் கூறுவதைப் புரிந்து கொள்ளவேண்டும். எல்லா இயக்கங்களையும் மதித்து அந்த இயக்கங்களையும் பயன்படுத்திக்கொள்ளவேண்டும்.

கடைசியில்

தன்னைச் சீரமைக்க தான் எதையுமே செய்யத் தேவையில்லை

- என்ற மிகச் சாதாரணமான புரிதலுக்கும் இந்தக் கணக்கரே வந்துவிடவேண்டும்.

கபடமற்ற தன்மையைக் கொண்டுவர கணக்கரால் என்றும் முடியவே முடியாது.

கணக்கர் பாம்பைக் கண்டு பயந்து விடுவார். ஆனால் குழந்தை பாம்பையும் விளையாட்டுப் பொருளாகக் கைகளில் எடுத்துவிடும்.

நமது மன அனுபவங்களை, நமது உணர்வு நிலையே இயல்பாக தன்னோடு இணைத்துக் கொள்ளும்

நீரே அலைகளை ஏற்றுக்கொள்வதைப்போல.

முக்தி இயற்கையானது; முயற்சி தேவையில்லை. விடுதலை இயற்கையானது; வேலை எதுவும் தேவையில்லை.



## உங்கள் சந்தாவை செலுத்திவிட்டீர்களா?

**சந்தாவை செலுத்துங்கள், இதழ் தொடர்ந்து சிறப்புடன் வெளிவர ஆதரவு தாருங்கள்.**

பின்வரும் ஏதாவது ஒரு வழியில் சந்தாவை செலுத்தலாம்.

1. சந்தா - ரூ. 100/- (1 ஆண்டு) ரூ. 200/- (2 ஆண்டு) ரூ. 300/- (3 ஆண்டு)
2. ஆயுள் சந்தா - ரூ. 1000/-

நன்கொடைகளை வழங்கி ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் பங்கெடுத்துக்கொள்ள விரும்புபவர்கள் பின்வரும் ஏதாவது ஒரு வழியில் உதவலாம்.

1. ஆண்டு நன்கொடை - ரூ. 1000/- (ஆண்டு ஒன்றுக்கு)
2. ஆயுள் நன்கொடை - ரூ. 10,000/-

நன்கொடை மற்றும் சந்தா அனுப்புபவர்கள் "Sri Bagavath Mission" என்ற பெயரில் சேலத்தில் செல்லதக்க Cheque, D.D. அல்லது M.O. ஆக அனுப்பலாம். அல்லது, HDFC, A/c. No. 15907620000075, NIFT IFSC : HDFC 0001590 என்ற எண்ணில் நேரடியாக செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் செல் : 9789165555 என்ற எண்ணில் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்
தலைமையகம், சேலம்.

## ஐயாவுடைய நிகழ்ச்சி

### டிசம்பர் 18 முதல் ஜனவரி 4 வரை திருச்செந்தூர்

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 05-01-2013<br>சனிக்கிழமை | சேலம் அம்மாப்பேட்டை அறிவுத் திருக்கோவில்,<br>அம்மாபேட்டை, சேலம்-3. | **உலக அமைதிக்கு ஆன்மீகத்தின் பங்கு**<br>மாலை 4-00 to 6-00 மணிவரை | திரு. K. S. ஜீவமணி - 97891-65555<br>திரு. V.A.P. சரவணன் 99942-05880 |
| 06-01-2013<br>ஞாயிறு | சாரதாம்பாள் ஸ்ரீனிவாசாமுதலியார் கல்யாண மண்டபம்,<br>டோல்கேட், வேலூர். | **நோயற்ற மற்றும் மன அழுத்தமற்ற வாழ்க்கை வாழ இரண்டு வழிகள்**<br>மாலை 3-00 to 8-00 மணிவரை | திரு. Dr. அருண்குமார் - 98435-69345 |

### 07-01-2013 முதல் 25-02-2013 வரை திருவண்ணாமலை முகாம்

ஐயாவின் சத்சங்கத்தில் கலந்துகொள்ள விரும்புபவர்கள் கீழ்க்கண்ட முகவரியில் சந்திக்கலாம்

108/21, T.S. R. நகர், யோகிராம் சுரத்குமார் ஆஸ்ரமம் மற்றும் அரசு கலைக்கல்லூரி விடுதி பின்புறம்,
திருவண்ணாமலை-606 603.

சத்சங்க நேரம் : காலை 10 to 12 மணி - மாலை 4 to 6 மணி

அனைவரும் வருக! தெளிவு பெறுக!!

## ?கேள்வி பதில்¿

கேள்வி : அகத்தில் எதுவும் செய்யமுடியாது என்பதற்கும், புறத்தில் நாம் தான் சிறப்பாக செயல்படவேண்டும் என்பதற்குமான பொருளை சற்று விளக்கமாகக் கூறவும்?

பதில் : அகம் என்பது தாமாக நடைபெறுகிற இயக்கம். புறம் என்பது நாமாகச் செயல்படுத்துகிற இயக்கம்.

நமது அகத்தில் ஏற்படும் எத்தனையோ எண்ணங்கள், உணர்வுகள் என அனைத்தும் தாமாக ஏற்படுபவை. அவைகளுக்கு எந்த வகையிலும் நாம் பொறுப்பு கிடையாது. நமது மனதில் நமக்கு, அடுத்தது இந்த எண்ணம்தான் தோன்றும், இந்த உணர்வுதான் ஏற்படும் என்று எவராலும் கூறமுடியாது.

நமது மனதில் எண்ணமும், உணர்வும் தோன்றிய பின்னர் மட்டுமே, நமது மனதில் இப்படிப்பட்ட எண்ணமும், உணர்வும் ஏற்பட்டுள்ளது என்பதை நம்மால் அறியமுடியும். அப்படி நமக்குத் தோன்றும் எண்ணமும், உணர்வும் நமது மனதில் தோன்றி, மறையும் நிலையிலேயே நம்மால் அடையாளம் காண முடிகிறது.

தாமாக ஏற்பட்ட எண்ணங்களையும், உணர்வுகளையும் நாமாக எதுவும் செய்யாமல் விட்டுவிட்டால், தாமாகத் தோன்றியவை தாமாகவே மறைந்துவிடும். நமது கவனத்திற்கு வராத எண்ணத்திற்கும், உணர்விற்கும் நமக்கே தெரியாமல் எத்தனை முறை அவைகளை எதிர்த்துப் போராடி இருந்தாலும், அதற்கு நாம் எந்த வகையிலும் பொறுப்பு கிடையாது. ஏன் என்றால் அவை நமது கவனத்திற்கு வரவில்லை.

நமது கவனத்திற்கு வராத எதற்கும் நாம் எப்படிப் பொறுப்பு ஏற்றுக்கொள்ளமுடியும். அகத்தை பொறுத்த வரையில் இந்த அளவில் முடித்து கொள்ள வேண்டும்.

புறம் என்பது செயல் உலகம். புறத்தில் தாமாக எதுவும் நடைபெறாது. இங்கு தாமாக நடைபெறுகிறது என்பது எல்லாம் கிடையாது. நாமாகத் தான் செயல்படவேண்டும். புறத்தில் ஒருவருடைய தேவையை குடும்பம், உறவினர்கள், தொழில், சமுதாயம் என எல்லாமும் சேர்ந்துதான் பூர்த்தி செய்யவேண்டியதுள்ளது. அதனால் மேற்சொன்ன அமைப்புடன் நாம் முடிந்த அளவிற்கு சிக்கல் இல்லாமல் பார்த்துக்கொள்வது என்பது புரிந்துகொண்டவர்களான நம்முடைய அடிப்படைக் கடமை ஆகும். புறத்தை இந்த அளவில் முடித்துக் கொள்ளவேண்டும்.

நமது அகத்தில் கலக்கத்தை ஏற்படுத்தும் வேண்டாத எண்ணங்களையும், உணர்வுகளையும் எவ்வாறு புறத்தில் தூண்டுகோலாக எடுத்துச் செயல்படுத்துவது என்பதை ஒரு யதார்த்த நடைமுறை உதாரணத்துடன் இந்த கேள்விக்கான விடையாக புரிந்துகொள்வோம்.

பகவத் ஐயாவின் அகம், புறம் என்ற புரிதலுக்கு முன்னால், நான் Car ஓட்டும்போது Car Start செய்தவுடன், என் மனதில் நாம் நல்லபடியாக போய்ச்சேர வேண்டிய இடத்திற்கு போய்ச் சேர்வோமோ அல்லது அதற்குள்ளாகவே Accident எதுவும் ஏற்பட்டு அந்த இடத்தில் Hospital எதுவும் இல்லாமல், Blood கிடைக்காமல், நாம் மிகவும் மோசமான நிலையை அடைந்திடுவோமோ என்ற (Negative thought) எதிர்மறை எண்ணமும், பய உணர்வும் தோன்றிவிடும். உடனே "ச்சீ என்ன நமக்கு இப்படி ஓர் எண்ணம்" என்று எனக்குள் ஏற்பட்ட Negative thought ஐ, சரிசெய்வதற்காக Positive thought Approach முறையை மேற்கொள்வேன்.

எனது மனதில் தோன்றிய Negative thought ஐப், போக்க, இறை நாமம், Auto suggestion, Positive thought Approach என ஆன்மிகத்தில் கூறிய அத்தனை முறைகளையும் பயன்படுத்துவேன்.

மேற்சொன்னவைகளை மனதிற்குக் கூறும்போது மனம் அமைதியாக இருப்பதுபோல் தோன்றும். மீண்டும் Car Start செய்தவுடன், பழையபடி எல்லா Negative thought ம், பயவுணர்வும் வந்துவிடும். நானும் என்னால் முடிந்தவரை Negative thought ஐப் போக்க எல்லா வழிமுறைகளையும் கடைப்பிடித்தேன். மனமும் அமைதியடையவில்லை. Car ஓட்டும்போதும் பதட்டமும் குறையவில்லை. வேறு எந்தவிதமான முன்னேற்றமும் ஏற்படவில்லை.

இந்த நிலையில் பகவத் ஐயாவின் மனதைப்பற்றிய புரிதலுக்கு பின், Car ஓட்டும்போது நமது மனதில் தோன்றும் எதிர்மறை எண்ணத்திற்கும், பய உணர்வுக்கும் நாம் ஒன்றும் செய்யத்தேவையில்லை, செய்யவும் முடியாது. அவை தாமாக ஏற்படுபவை என்பதைப் புரிந்துகொண்டு, எனது மனதில் ஏற்பட்ட எதிர்மறை எண்ணங்கள், பய உணர்வுகளை சீர்படுத்துவதற்கான முயற்சியை மட்டும் கைவிட்டுவிட்டேன். அதேநேரம் அந்த எதிர்மறை எண்ணமும் பய உணர்வும் புறத்தில் காரை கவனமாக ஓட்டவேண்டும் என்ற விழிப்புணர்வாகச் செயல்படுவதற்குத் தூண்டுகோலாக அமைந்துவிட்டது. எனவே கவனமாக Car ஓட்டுவதிலும், Car ஓட்டும்போது எங்கே Overtake எடுக்கவேண்டும், எங்கே Slow வாக ஓட்டவேண்டும் என்ற புற இயக்கத்தில் கவனம் செலுத்தினேன். இருந்தபோதும் எதிர்மறை எண்ணமும், பய உணர்வும் தோன்றித்தோன்றி மறையத் தொடங்கின. ஆரம்ப காலகட்டத்தில் ஏற்பட்ட எதிர்மறை எண்ணமும், பய உணர்வும் நாளடைவில் குறையத் தொடங்கின. நாட்கள் செல்லச் செல்ல கலக்கமான மன நிலையின் அளவு குறைந்து புறத்தில் கவனம் கூடியது. சில மாதங்களில் மனக்கலக்கம் ஏற்படுவது முற்றிலும் குறைந்தது, அப்படியும் மீறி அந்த கலக்கமான உணர்வு ஏற்பட்டாலும் நாம் அதற்கு பொறுப்பு கிடையாது என்பதால் அதன் தாக்கமும் குறைந்தது. இப்போது மனக்கலக்கமின்றி விழிப்புணர்வோடு Car ஓட்டமுடிகிறது.

இங்கு நடந்தது என்ன? நமது அகத்தில் தாமாக ஏற்பட்ட Negative thought ஐ அப்புறப்படுத்த நாமாக முயன்று செய்யக்கூடிய பயிற்சிகளான Positive thought Approach, Auto Suggestion, இறைநாமங்கள் போன்றவற்றால் இதுவரை எந்த மாற்றமும் நிகழவில்லை. நம்முடைய அகத்தை மாற்றுவதற்கான பயிற்சியும், முயற்சியும் பயனற்றது. அகத்தை எதுவும் செய்யமுடியாது என அப்படியே ஏற்றுக்கொண்டு, அக இயக்கத்தை மாற்றுவதற்கான முயற்சியில் செலவாகக்கூடிய Energy ஐயும் புற இயக்கத்தில் செலுத்தி வெற்றியடைய வேண்டும். புற இயக்கத்தில் நன்றாகத் திட்டமிட்டு, முழு முயற்சிகளை மேற்கொண்டு வாழ்வில் உயரவேண்டும்.

இதேபோல் இன்னுமொரு உதாரணம், ஒரு பள்ளி மாணவனுக்கு தேர்வு பயம் வருகிறது என வைத்துக்கொள்வோம், அந்த பய உணர்வை தேர்வுக்கு படிப்பதற்கான தூண்டுகோலாக பயன்படுத்தி நன்றாகப் படிக்கவேண்டும். பய உணர்வை எதிர்த்து போராடுவது என்பது பய உணர்வை நீட்டிக்கும் முயற்சியே.

நம் இயல்புக்கு ஏற்ப எல்லா உணர்வுகளும் தோன்றலாம். நாம் அவற்றை எதிர்த்துப் போராடாதபோது அவை புறத்திற்கு தேவையான தூண்டுகோலாக மட்டுமே அமைந்து மறைந்துவிடும்.

மேற்சொன்னபடி நமக்கு ஏற்படும் மிக மோசமான எண்ணங்கள், உணர்வுகளைக் கூட புறத்தில் சிறப்பாக செயல்படுவதற்காக மாற்றி அமைத்துக்கொண்டு வாழ்வில் உயர வேண்டும்.

அகம் - முயற்சி செய்யக்கூடாத இடம்;
புறம் - முயற்சி செய்யவேண்டிய இடம்.

V.A.P. சரவணன்,
சேலம்.
செல் : 99942-05880

# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

சென்ற 8-12-2012 அன்று சென்னை பெரம்பூரில் உள்ள பெரம்பூர் அன்னதான சமாஜத்தில் நடைபெற்ற சத்சங்கத்தில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் " சாதாரண மனிதர்களும் ஞானமடையலாம்" என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றினார்கள். இதை சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையம் ஏற்பாடு செய்திருந்தது. புதிய அன்பர்கள் பலரும் கலந்து கொண்டு பயனடைந்தனர்.

நமது பாதையின் இனிய பயணத்தில், புதிய பயணிகளின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வருகின்றன.

மனதை மனதே சுமக்கும் மாயையால் துயரடைவோர்களுக்கு, இளைப்பாறுதல் தரும் இடமாக அமைந்துவிட்டது நமது பகவத் பாதை.

ஐயாவின் நூல்களைப் படித்து பயனடைந்தவர்களில் பலர் தாம் பெற்ற பயனை நம்மோடு பகிர்ந்து வருகிறார்கள்.

சில நாட்களுக்கு முன் "ஆகாமிய கர்மா" நூலைப் படித்த மதுரையைச் சேர்ந்த அன்பர் ஒருவர் நம்மோடு பகிர்ந்துகொண்டார்.

"எனக்கு ஜோதிடத்தில் நம்பிக்கை அதிகம். எல்லாம் கர்ம வினைப்படிதான் நடக்கும், நம் கையில் ஏதுமில்லை என நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால் இந்நூல் எனக்கு நல்ல தெளிவைக் கொடுத்திருக்கிறது.

நாம் செயல்படக்கூடிய சுதந்திரம் நம்மிடம்தான் உள்ளது என்பதைத் தெரிந்துகொண்டேன். நமக்கு ஏற்படும் சூழ்நிலை நம் கையில் இல்லை, ஆனால் அச்சூழ்நிலையில் எப்படிச் செயல்படவேண்டும் என்ற சுதந்திரம் நம்கையில்தான் இருக்கிறது. எனவே அச்சூழலுக்கு தகுந்த நல்லச் செயல்களை செய்வதன் மூலம், நம் கர்மாவையும் மாற்றிக்கொள்ளலாம், நல்ல வாழ்க்கையையும் அமைத்துக் கொள்ளலாம் என்பதை நன்கு புரிந்துகொண்டேன். என் வாழ்க்கையில் எனக்குக் கிடைத்த மிகப்பெரிய பொக்கிஷமாக இப்புத்தகத்தைக் கருதுகிறேன்" எனக்கூறி தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்.

உண்மையில் இப்புத்தகம், நல்ல செயல்கள் செய்வதற்கான சுதந்திரம் நம்மிடம் இருக்கிறது என்பதை உணர்த்தும் புத்தகமாக அமைந்துள்ளது.

இப்புத்தகம் பலருக்கும் சென்றடைந்தால் நல்ல சமுதாய மாற்றத்தையே கொடுக்கும் என்பது திண்ணம்.

பொதுவாக நம் அனைவருக்குமே சமுதாயக் கடமை என்று உண்டு. நாம் ஒவ்வொருவருமே இச்சமுதாயத்தின் அங்கத்தினர்தான். இச்சமுதாயம் உருவாக்கும் பொருட்களையும், வசதிகளையும் நாம் ஒவ்வொருவரும் பயன்படுத்திக்கொண்டு இருக்கிறோம். அவற்றை திருப்பிச் செலுத்துவது என்பது, இச்சமுதாயத்திற்காக நாம் செய்யக்கூடிய நல்ல செயல்களில்தான் உள்ளது. அதற்கான சுதந்திரமும் நம்மிடம் உள்ளது.

இவ்வுலகில் எத்தனையோபேர் அவரவர் தேவைகளை மட்டும் பூர்த்திசெய்துகொண்டு சும்மா இருந்துவிடுகிறார்கள்.

இது சரியானதல்ல. நம் செயல்கள் நம் தேவையை மட்டும் நிறைவு செய்வதோடு அல்லாமல் சமுதாய நலனுக்காகவும் சென்றடையவேண்டும்.

சாதாரண மனிதன் தன் அகத்தையும், புறத்தையும் சீரமைக்கப் போராடுகிறான். தன் ஆற்றலை அதற்காக அதிகம் செலவிடுகிறான்.

தன்னைப் புரிந்துகொண்ட மனிதனுக்கு அகத்தில் செய்வதற்கு எதுவுமில்லை. அவனைப் பொறுத்தவரையில் அகம் என்பது முடிந்து விடுகிறது. இருப்பது புறம் மட்டுமே. அதனால் புறத்தே தன் ஆற்றலை முழுமையாகப் பயன்படுத்தி தனக்காகவும் உலக நலனுக்காகவும் செயல்படவேண்டும்.

ஐயாவின் மனத்தெளிவைப் பற்றிய புதிய அணுகுமுறையால், பலருக்கும் ஞானத்தெளிவு ஏற்பட்டிருக்கிறது. இத்தெளிவே மன துயரங்களை போக்கி விடுதலையை தரவல்லது. இப்படி ஓர் உண்மை இருக்கிறது என்பதை சமுதாயத்திற்கு தெரிவித்து அதைத் தேவையுள்ள பலரிடமும் கொண்டு சேர்ப்பது என்பது அனைத்திலும் சிறந்த தொண்டு ஆகும்.

இப் புரிதலின் மூலம் பயனடைந்தவர்களில் சிலரின் முயற்சியால் மட்டுமே பகவத் பாதை, புத்தகங்கள், சி.டி., இணையதளம், ஐயாவின் சத்சங்க ஏற்பாடு என, இப்புதிய அணுகுமுறை இச்சமுதாயத்திற்கு கொண்டு சேர்க்கப்பட்டு வருகிறது.

சமுதாயக் கடமையாகச் செய்யும் ஒரு சிலரின் நற்செயலே இந்த ஞானத்தெளிவை பலருக்கும் கொண்டுசேர்க்க உதவியாக இருக்கின்றது என்றால், இப்பாதையில் பயணிக்கும் நாம் அனைவரும் உதவ முன்வந்தால், உலக அமைதி என்பது மிகவிரைவில் அடைந்துவிடும். எனவே இத்தொண்டிற்கு அனைவரையும் அழைக்கின்றோம். இது தங்களுக்கு கொடுக்கப்படும் ஆணையோ அல்லது அறிவுரையோ கிடையாது. அனைவரும் கைகோர்த்து செயல்பட அழைக்கும் ஓர் அழைப்பு.....

அன்புடன்,

**K.S. ஜீவமணி**, ஆசிரியர்,
செல் : 97891-65555

# ஸ்ரீ பகவத் ஐயாவின்
# "ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்"

எனும் புதிய நூலைப் பெற விண்ணப்பிக்கும் முறை :

சென்ற மாத இதழின் அறிவிப்பைத் தொடர்ந்து பல அன்பர்களிடம் இருந்து விண்ணப்பங்கள் வந்துகொண்டு இருக்கின்றன.

இதில் ஐயாவின் ஓரிரண்டு புத்தகங்களை மட்டும் படித்தவர்கள்கூட விண்ணப்பித்திருக்கிறார்கள்.

ஐயாவுடைய நூல்கள் ஒவ்வொன்றிலும், உண்மையை ஒவ்வொரு கோணத்தில் அணுகி விளக்கப்பட்டிருப்பதால் அனைத்து நூல்களையும் படிப்பதே ஐயமின்றி தெளிவுபெற உதவியாக இருக்கும்.

எனவே ஐயாவின் அனைத்து நூல்களையும் படித்து தெளிவு பெறுவதற்கு முன்னால் இந்த புதிய நூலைப் பெற்றிட எவரும் ஆர்வம் காட்டவேண்டாம் என அன்புடன் வேண்டுகிறோம்.

மேலும் சில அன்பர்கள், "இந்த புதிய நூலுக்கு ஏன் இந்த கட்டுப்பாடு?" என கேள்வி எழுப்பியுள்ளார்கள்.

**"ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" எனும் புதிய நூல் தெளிவடைந்தவர்களுக்காக மட்டுமே எழுதப்பட்டுள்ளது.** ஆதலால் தெளிவுக்கு பின் ஏற்படும் நடைமுறை சிக்கலை தீர்க்க சில விபரங்களையும், கருத்துகளையும் இந்நூலில் வெளிப்படையாக விவரிக்கப்பட்டுள்ளன.

இந்த விபரங்கள் யாவும் தெளிவடையாதவர்களிடம் தெளிவுக்கு பதில் தேவையற்ற குழப்பத்தையே ஏற்படுத்திவிடும்.

ஆகவே அவர்களின் நலன் கருதி இந்நூலின் விநியோகத்திற்காக சில கட்டுப்பாடுகளை ஏற்படுத்த வேண்டியதாகிவிட்டது என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

மேலும் தெளிவடைந்தவர்கள் தான் பெற்ற தெளிவில் உறுதியும் நிறைவும் அடைந்து இப்புத்தகம் தனக்குத் தேவையில்லை என்று கருதும் பட்சத்தில் இந்த அறிவிப்பை புறக்கணித்துவிடுமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறோம்.

இந்நூலைப் பெற விரும்புவர்கள், நூல் பெறுவதற்கான விண்ணப்பப் படிவத்தைக் கீழ்கண்ட முகவரிகளில் நேரில் சென்று பெற்றுக்கொள்ளலாம். மற்றும் **www.pravaagam.org** என்ற இணைய தளத்திலிருந்து **download** செய்துகொள்ளலாம். தபாலில் பெற விரும்புபவர்கள், முகவரிகளில் கீழே கொடுக்கப்பட்ட அலைபேசி எண்களுடன் தொடர்பு கொண்டோ அல்லது SMS மூலமாகவோ தங்களின் முகவரியை தெரிவித்துப் பெற்றுக்கொள்ளலாம். விண்ணப்பப்படிவத்தில் கேட்கப்படும் கேள்விகளுக்கு பிறருடைய உதவியில்லாமல் விண்ணப்பதாரர் மட்டுமே பூர்த்தி செய்யவேண்டும். பூர்த்தி செய்யப்பட்ட உங்களின் விண்ணப்பங்கள் எங்களிடம் பாதுகாக்கப்படுவதால் விண்ணப்ப எண்ணை பயன்படுத்தி நூல் தொடர்பான விபரங்களை பெற்றுக்கொள்ளலாம். எனவே விண்ணப்பப்படிவத்தை Xerox பிரதி எடுத்து யாரும் பயன்படுத்தவேண்டாம் எனக் கேட்டுக்கொள்கிறோம்.

பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பம் அனுப்பவேண்டிய முகவரி :




ஸ்ரீ பகவத் மிஷன், தலைமையகம்,
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003.
செல் : 9994205880, 9443290559, 9789165555.

விண்ணப்பம் கிடைக்கும் இடங்கள் :

1. ஸ்ரீ பகவத் மிஷன்
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003.
செல் : 9994205880, 9443290559, 9789165555.

5. ஸ்ரீ பகவத் மிஷன், சேலம் மையம்
அம்ருதா ஹோமியோ கிளினிக்,
8A/189, சரஸ்வதி தெரு, அத்வைத ஆஸ்ரமம் ரோடு,
புதிய பஸ் நிலையம் எதிரில், சேலம்.
செல் : 9488694453, 9894377433, 9443290559

3. ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மையம்,
270, பொத்தனூர் ரோடு,
முருகன் தியேட்டர் எதிரில்,
பரமத்தி வேலூர், நாமக்கல்.
செல் : 9360579181, 9360110755, 9787253751

4, ஸ்ரீ பகவத் மிஷன், திருப்பூர் மையம்
ஸ்ரீ பாலகுமரன் நிட்ஸ், 40, தட்டான் தோட்டம்,
4-வது தெரு, பல்லடம் ரோடு, திருப்பூர் -4.
செல் : 9944044988, 9442215248, 9865623709

2. ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்
23/10, Old Bank of Baroda Street,
Secretariate Colony, Ambattur, Chennai - 600 053.
Cell : 9884097438, 9952071525.

6. திரு. R. ஆனந்தகுமார், கோவை
1548, திருச்சி ரோடு, விவேகாலயா பள்ளி எதிரில்,
ரிச்மான்ட் ஹாஸ்பிட்டல் அருகில், கோவை.
செல் : 98422-31582.

7. திரு. சரண்குமார், திருச்சி
ஜென் சங் அக நூலகம், 450, பெரியகடைவீதி,
லட்சுமிவிலாஸ் பேங்க் அருகில், திருச்சி-8.
போன் : 0431-2701239, செல் : 98940-12639

## இலவச Download

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் தமிழ், ஆங்கில நூல்கள் மற்றும் பகவத் பாதை மாத இதழ் அனைத்தையும் www.pravaagam.org என்ற இணைய தளத்திலிருந்து (website) இலவசமாக download செய்து படித்து பயன்பெறலாம்.

இந்த வசதியை பயன்படுத்தி நாள் ஒன்றுக்கு சராசரியாக 25 முதல் 35 நபர்கள் உலகின் பல்வேறு பகுதிகளில் இருந்து download செய்துள்ளார்கள். சென்ற ஓர் ஆண்டில் மட்டும் 12,397 நபர்கள் இந்த வசதியை பயன்படுத்தியுள்ளார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் நிகழ்ச்சிகளையும் மற்ற விபரங்களையும் உடனுக்குடன் தெரிந்துகொள்ள blog.pravaagam.org & sribagavath.org என்ற இணையத் தளத்தை பயன்படுத்திக்கொள்ளலாம்.

ஜென் கதை 'விடுதலை'

## ஜென் கதை

### விடுதலை

கௌதமபுத்தர் ஒரு வழியில் நடந்து சென்றார். அப்போது எதிரே வந்த ஒருவன் மிகுந்த கோபத்துடன் புத்தர் முகத்தில் காறி எச்சிலை துப்பினான். தன் மேல்துண்டால் துடைத்துவிட்டு "இன்னும் ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?" என்றார் புத்தர். அருகில் நின்ற ஆனந்தாவுக்கு கோபம் வந்தது. புத்தர் ஆனந்தாவை பார்த்துச் சொன்னார் "ஆனந்தா, இவர் ஏதோ சொல்ல விரும்புகிறார். ஆனால் அவருக்கு வார்த்தைகள் இல்லாததால் இந்தச் செயலைச் செய்து விட்டார். வார்த்தைகள் பலவீனமானவை. இவர் என்ன செய்ய முடியும்?" என்று கூறிவிட்டு சென்று விட்டார்.

துப்பியவனுக்கு அன்று முழுவதும் குற்ற உணர்வால் நித்திரையே வரவில்லை. அடுத்த நாள் காலை புத்தரைத் தேடியலைந்து கண்டு அவரது காலில் விழுந்து அழுதான். அப்போதும் புத்தர் ஆனந்தாவை பார்த்து சொன்னார். "இன்றும் இவர் ஏதோ சொல்ல விரும்புகிறார் ஆனந்தா! ஆனால் வார்த்தைகள் பலவீனமானதால் இச்செயலை செய்துவிட்டார்!" என்றார். அவன் எழுந்து கேட்டான் "நான் துப்பிய போது நீங்கள் ஏன் திருப்பி ஒரு வார்த்தைகூட ஏசவில்லை?" என்று.

அப்போது புத்தர் அழகான பதில் சொன்னார். "நீ எண்ணியது போல் நடக்க நான் என்ன உன் அடிமையா?"

"விடுதலை என்பது எதையும் அடையாமல் இருப்பது மட்டுமன்று; அனைத்தையும் ஏற்றுக்கொள்வதும் கூட"



நன்கொடை சந்தா செலுத்த விரும்புபவர்கள், ரூ.100/-க்கான சேலத்தில் செல்லத்தக்க Cheque/DD/MO-வை SRI BAGAVATH MISSION என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

To

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.